உ
ஸ்ரீ குருப்யோ நம:

# ஞானயோகம்

பாஷ்ய பாவக்ஞ
**பிரம்மஸ்ரீ வரஹூர் கல்யாணசுந்தர சாஸ்திரிகள்**
(U.G.C. Professor of Samskrit
Vivekananda College, Madras -4)

## முன்னுரை

**लोकेऽस्मिन् द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयानघ ।**
**ज्ञानयोगेन सांख्यानां कर्मयोगेन योगिनाम् ॥ ३.३ ॥**

**லோகே(அ)ஸ்மின் த்[3]விவிதா[4] நிஷ்டா[2] புரா ப்ரோக்தா மயானக[4] ।**
**ஜ்ஞானயோகே[3]ன ஸாங்க்[2]யானாம் கர்மயோகே[3]ன யோகி[3]னும் ॥ 3.3 ॥**

என்று பகவத் கீதையில் பகவான் கூறியுள்ள இரு யோகங்களுள் ஞான யோகம் ஒன்றுகும். (2.49, 10-10, 18.57) ஆகிய இடங்களில் இதையே புத்தியோகம் எனவும் பகவான் கூறியிருக்கிறுர். பக்தியோகத்தைத் தன்னுள் கொண்ட **கர்ம யோகம்** என்பது மற்றென்றாகும். அவ்விரண்டு யோகங்களும் அதாவது கர்ம யோகம், பக்தியோகம் எனப்படும் இருயோகங்களும் முறையே ஞானயோகத்தை நாம் பெறுவதற்கு உபாயங்கள் ஆகும். இவ்விஷயங்களை எல்லாம் விளக்கி முன்பே **'கர்மயோகம்' 'பக்தியோகம்'** என்ற இரு சிறு நூல்களை தனித்தனியே நாம் வெளியிட்டு இருக்கிறோம். விவரங்களை அறிய விரும்புவோர் அவற்றைப் பார்த்து அறிந்து கொள்ளலாம். அவற்றின் தொடர்பாகவே இப்பொழுது **'ஞானயோகம்'** என்னும் இக் கட்டுரையை இங்கு எழுதுகிறோம்.

**तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिपन्ति यज्ञेन दानेन तपसानाशकेन ।**

**தமேதம் வேதா[3]னுவசனேன ப்[3]ராஹ்மணா விவிதி[3]பந்தி**
**யஜ்ஞேன தா[3]னேன தபஸாநாஶகேன ।**

**आरुरुक्षोर्मुने योगं कर्म कारणमुच्यते ।**
**कषायपक्तिः कर्माणि ज्ञानं तु परमा गतिः ।**
**कषाये कर्मभिः पक्वे ततो ज्ञानं प्रवर्तते ॥**
**चित्तस्य शुद्धये कर्म न तु वस्तूपलब्धये ॥**

**ஆருருக்ஷோர்முனே யோக[3]ம் கர்ம காரணமுச்யதே ।**
**கஷாயபக்திः கர்மாணி ஜ்ஞானம் து பரமா க[3]திः ।**
**கஷாயே கர்மபி[4]ः பக்வே ததோ ஜ்ஞானம் ப்ரவர்ததே ॥**
**சித்தஸ்ய ஶுத்[3]த[4]யே கர்ம ந து வஸ்தூபலப்[3]த[4]யே ॥**

என்பன போன்ற வாக்யங்களே கீழ்க்கூறியுள்ள விஷயங்களுக்குப் பிரமாணங்களாகும்.

இக்காரணம் பற்றியேதான் பகவான் பகவத் கீதையிலேயே.

**सांख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः ।**
**एकमप्यास्थितः सम्यगुभयोर्विन्दते फलम् ॥ ५.४ ॥**

**ஸாங்க்²யயோகௌ³ ப்ருத²க்³பா³லா: ப்ரவத³ந்தி ந பண்டி³தா: ।**
**ஏகமப்யாஸ்தி²த: ஸம்யகு³ப⁴யோர்விந்த³தே ப²லம் ॥ 5.4 ॥**

**यत्सांख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।**
**एकं सांख्यं च योगं च यः पश्यति स पश्यति ॥ ५.५ ॥**

**யத்ஸாங்க்²யை: ப்ராப்யதே ஸ்தா²னம் தத்³யோகை³ரபி க³ம்யதே ।**
**ஏகம் ஸாங்க்²யம் ச யோக³ம் ச ய: பஶ்யதி ஸ பஶ்யதி ॥ 5.5 ॥**

என்றும் கூறியிருக்கிருர்.

அர்ஜுனஊ வ்யாஜமாக வைத்து நம் எல்லோருக்கும் இந்த யோகத்தை உபதேசிக்கவே பகவத்கீதை தோன்றியதாகும். சோகமோஹமெனப்படும் அளவில்லாத துக்கத்தில் ஆழ்ந்து கிடந்த அர்ஜுனஊ இந்த யோகத்தின் மூலமே அதிலிருந்து விடுவித்து கடமையையும் செய்வித்துப் பேரானந்தத்தை அடையச் செய்த நூலும் இதுவேயாகும்.

தோற்றுவாய்

## நாம் அனுபவிப்பது என்ன?

பகவத்கீதையில் ஒன்பதாவது அத்யாயம் முப்பத்து மூன்ருவது ச்லோகத்தில் பகவான் அர்ஜுனஊப் பார்த்து

**अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥ ९.३३ ॥**

**அநித்யமஸுக²ம் லோகமிமம் ப்ராப்ய ப⁴ஜஸ்வ மாம் ॥ 9.33 ॥**

என்று கூறியிருக்கிருர். அதிலிருந்து நாம் வாழ்ந்து வரும் இந்த மனுஷ்யலோகம் நிஊயற்றதென்றும் ஸுகமற்றதென்றும் தெளிவாகத் தெரிகின்றது. அவ்வாறே

**मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्णसुखदुःखदाः ।**
**आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥ २.१४ ॥**

**மாத்ராஸ்பர்ஶாஸ்து கௌந்தேய ஶீதோஷ்ணஸுக²து³:க²தா³: ।**
**ஆக³மாபாயினோ(அ)நித்யாஸ்தாம்ஸ்திதிக்ஷஸ்வ பா⁴ரத ॥ 2.14 ॥**

என்று இரண்டாம் அத்யாயத்திலும்

**ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते ।**
**आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः ॥ ५.२२ ॥**

**யே ஹி ஸம்ஸ்பர்ஶஜா போ⁴கா³ து³:க²யோனய ஏவ தே ।**
**ஆத்³யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே பு³த⁴: ॥ 5.22 ॥**

என்று ஐந்தாம் அத்யாயத்திலும்

**विषयेन्द्रियसंयोगाद्यत्तदग्रेऽमृतोपमम् ।**
**परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम् ॥ १८.३८ ॥**

**விஷயேந்த்³ரியஸம்யோகா³த்³யத்தத³க்³ரே(அ)ம்ருதோபமம் ।**
**பரிணாமே விஷமிவ தத்ஸுக²ம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 18.38 ॥**

என்று பதினெட்டாமத்தியாயத்திலும் கூறியிருக்கிறுர். இதிலிருந்து நாம் நமது உடல் பொருளாவியெல்லாம் ஒருமுகப்படுத்தி எதை ஸுகமெனக் கருதி அடைய விரும்பு கிறேமோ, எதற்கு மேற்பட்ட ஸுகமும் இல்லை யென்று கருதுகிறேமோ, அதை பகவான் துக்க மென்றே கருதுகிறுர் என்பதும் தெளிவாகின்றது.

இவ்விஷயத்தில் ஆன்றேர் கூறியுள்ள ஒரு விஷயத்தையும் கவனிப்போம்.

**असारेऽखिलसंसारे सुखभ्रान्तिः शरीरिणाम् ।**
**लालापान इवाङ्गुष्ठे बालानां स्तन्यविभ्रमः ॥**

**அஸாரே(அ)கி²லஸம்ஸாரே ஸுக²ப்⁴ராந்தி: ஶரீரிணாம் ।**
**லாலாபான இவாங்கு³ஷ்டே² பா³லாநாம் ஸ்தன்யவிப்⁴ரம: ॥**

விரல் சுவைக்கும் குழந்தைகளுக்கு அவ்விரலை சுவைக்கும் போது வாயிலிருந்தே உண்டாகும் உமிழ்நீரில் தாய்ப்பாலே இது என்ற மயக்கம் எப்படி ஏற்படுகின்றதோ அப்படியே பிறவியை அடைந்த எல்லா ஜீவராசிகளுக்கும் அஸாரமான விஷய போகங்களை அனுபவிக்கும்பொழுது ஏற்படும் துயரத்தில் ஸுகமே இது என்ற மயக்கம் ஏற்படுகின்றதென்பதே இதன் கருத்தாகும்.

**श्वोभावा मर्त्यस्य यदन्तकैतत्सर्वेन्द्रियाणां जरयन्ति तेजः।**
**- कठोपनिषद् १.१.२६**

**ஶ்வோபா⁴வா மர்த்யஸ்ய யத³ந்தகைதத்ஸர்வேந்த்³ரியாணாம் ஜரயந்தி தேஜ:।**
**-கடோ²பநிஷத்³ 1.1.26**

என்னும் கடவல்லிவாக்யமும் இக்கருத்தையேதான் வலுப்படுத்துகின்றது,

**इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।**
**तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपन्थिनौ ॥ ३.३४ ॥**

**இந்த்3ரியஸ்யேந்த்3ரியஸ்யார்தே2 ராக3த்3வேஷௌ வ்யவஸ்தி2தௌ ।**
**தயோர்ன வஶமாக3ச்சே2த்தௌ ஹ்யஸ்ய பரிபந்தி2னௌ ॥ 3.34 ॥**

**इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते।**
**तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि ॥ २.६७ ॥**

**இந்த்3ரியாணாம் ஹி சரதாம் யன்மனோ(அ)னுவிதீ4யதே।**
**தத3ஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர்னாவமிவாம்ப4ஸி ॥ 2.67 ॥**

என்பன போன்ற பகவத் வாக்கியங்களும் இக்கருத்தையேதான் பிரதிபலிக்கச் செய்கின்றன. இக்காரணம் பற்றியே

**गुडनिम्वरसौ यद्वदन्यथा भासते विषात् ।**
**सुखदुः खे तद्वदेव भातो नोऽविद्ययाऽन्यथा ॥**

**கு3ட3னிம்வரஸௌ யத்3வத3ன்யதா2 பா4ஸதே விஷாத் ।**
**ஸுக2து3: கே2 தத்3வதே3வ பா4தோ நோ(அ)வித்3யயா(அ)ன்யதா2 ॥**

என்றும் கூறப்படுகின்றது. விஷம் தீண்டியவனுக்கு இனிப்பும் கசப்பும் மாறித் தோன்றுவது போல் அறியாமை உள்ளவனுக்கு ஸுகமும் துக்கமும் மாறித் தோன்றுகின்றது என்பது இதன் பொருளாகும். ஆகவே நாம் இப்பொழுது ஸுகமெனக் கருதுவது ஸுகமேயல்ல என்பதை உணர வேண்டும்.

ஆயினும் அதைப் பெறுவதற்காகவே நாம் நம்மையும் அறியாமலேயே முயற்சிக்கின்றோம். அதற்குக் காரணம் என்ன என்பதையும்

**अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः।**
**अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥ ३.३६ ॥**

**அத2 கேன ப்ரயுக்தோ(அ)யம் பாபம் சரதி பூருஷ:।**
**அனிச்ச2ன்னபி வார்ஷ்ணேய ப3லாதி3வ நியோஜித: ॥ 3.36 ॥**

என அர்ஜுனனைக் கொண்டே கேட்கச் செய்து பல துறைகளில் பகவானே அதை விளக்கியிருக்கின்றார். அவரைத் தவிர வேறு யாரால் அதை விளக்க முடியும்? அவருடைய விளக்கத்தைவிட்டு வேறு யாருடைய விளக்கத்தைத்தான் நாமும் நம்புவது?

## துன்பத்திற்குக் காரணம் எது?

முதன் முதலில் இரண்டாம் அத்யாயத்தில் அவர் கூறியுள்ள சில விஷயங் களைக் கவனிப்போம்

**ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते।**
**सङ्गात् संजायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥ २.६२ ॥**

**த்⁴யாயதோ விஷயான்பும்ஸ: ஸங்க³ஸ்தேஷூபஜாயதே।**
**ஸங்கா³த் ஸஞ்ஜாயதே காம: காமாத்க்ரோதோ⁴(அ)பி⁴ஜாயதே ॥ 2.62 ॥**

**क्रोधाद्भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः।**
**स्मृतिभ्रंशाद् बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥ २.६३ ॥**

**க்ரோதா⁴த்³ப⁴வதி ஸம்மோஹ: ஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்⁴ரம:।**
**ஸ்ம்ருதிப்⁴ரம்ஶாத்³ பு³த்³தி⁴நாஶோ பு³த்³தி⁴நாஶாத்ப்ரணஶ்யதி ॥ 2.63 ॥**

என்று ஓரிடத்தில் கூறுகிறார்.

ஒருவன் ஐம்புலன்களால் நுகரக்கூடிய ஒவ்வொரு விஷயத்தையும் திரும்பத் திரும்ப தனது நினைவிற்குக் கொண்டு வந்து சிந்திப்பதனால் அதில் பற்று ஏற்படுகி ன்றது. அதன் காரணமாக அதை எப்படியும் தான் அடையவேண்டும் என்ற ஆசை ஏற்படுகின்றது. பெரும்பாலும் அது தடைப்படும் காரணமாகக் கோபம் உண்டாகி ன்றது. (இல்லையேல் சோகமுண்டாகின்றது,) அதன் காரணமாகத் தான் செய்ய வேண்டியது எது செய்யக்கூடாதது எது என்ற அறிவு அழிந்துபோகிறது. அதாவது மனத்தில் பெரும் கலக்கம் ஏற்படுகின்றது. அதன் காரணமாகத் தான் கற்றடைந்த நுண்ணறிவு மறைந்து விடுகிறது. அதன் காரணமாக மனது ஓய்வடைகின்றது. அதன் காரணமாகவே ஒருவன் பலவகையான துன்பங்களுக்கு ஆளாகிறான் என்பதே இவ்விரு ச்லோகங்களின் கருத்தாகும்.

இனி அவர் மூன்றும் அத்யாயத்தில் கூறியுள்ள சில விஷயங்களையும் கவனி ப்போம்.

**काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः।**
**महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम् ॥ ३.३७ ॥**

**காம ஏஷ க்ரோத⁴ ஏஷ ரஜோகு³ணஸமுத்³ப⁴வ:।**
**மஹாஶனோ மஹாபாப்மா வித்³த்⁴யேனமிஹ வைரிணம் ॥ 3.37 ॥**

**इन्द्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते।**
**एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥ ३.४० ॥**

**இந்த்³ரியாணி மனோ பு³த்³தி⁴ரஸ்யாதி⁴ஷ்டா²னமுச்யதே।**
**ஏதைர்விமோஹயத்யேஷ ஜ்ஞானமாவ்ருத்ய தே³ஹினம் ॥ 3.40 ॥**

என்று ஓரிடத்தில் கூறுகின்றார்.

ஒவ்வொருவனுக்கும் அவ்வந்த விஷயங்களில் முதன் முதலில் ஏற்படும் ஆசையே அவனவனைத் தன் வசப்படுத்தித் துன்பங்களுக்கே காரணமான விஷயங்களை யடைவதற்கான முயற்சிகளிலேயே இறங்கச்செய்கின்றது. இதுவே பற்பல காரணங்களால் தடைப்படும் நிலையில் கோபமாக மாறுகின்றது. ஆசையில்லையேல் கோபமில்லை. ரஜோகுணத்தின் அடிப்படையிலேயே இவ்வாசை எழுகின்றது.

**रजसो लोभ एव च**

**ரஜஸோ லோப⁴ ஏவ ச**

என்பதும் பகவத் வாக்யமாகும்.

**न जातु कामः कामानामुपभोगेन शाम्यति ।**
**हविषा कृष्णवर्त्मैव भूय एवाभिवर्धते ॥**

**ந ஜாது காம: காமாநாமுபபோ⁴கே³ன ஶாம்யதி ।**
**ஹவிஷா க்ருஷ்ணவர்த்மைவ பூ⁴ய ஏவாபி⁴வர்த⁴தே ॥**

அதாவது, நெய்யை ஊற்ற ஊற்றத் தீ எப்படி மேன்மேலும் வளருமேயன்றி ஒடுங்காதோ அவ்வாறே ஆசையென்பது அந்தந்த விஷயங்களை அனுபவிப்பதால் மேன்மேலும் வளருமேயன்றி ஒடுங்காது என்றபடி இந்த ஆசையானது பெரும்தீனி வேண்டி அவற்றைப் பெறுவதற்காக நம்மைப் பெரும்பெரும் பாபத்தையும் செய்யத் தூண்டுகின்றது. ஆகவே ஒவ்வொருவனுக்கும் அவனவனது ஆசையைத் தவிர வேறு எதிரியே கிடையாது. ஆசையேதான் முதல் எதிரி என உணரவேண்டும். ஐம்புலன்கள் மனது புத்தியெனப்படும் இடங்களில் ஒளிந்து நின்று அவைகளைத் தன்னிஷ்டம் போல் தூண்டிவிடுவதன் மூலம் ஒவ்வொருவனையும் அவனவனது நுண்ணறிவை மறைத்து மயங்கச் செய்கின்றது என்பதே இவ்விரு ச்லோகங்களின் கருத்தாகும்.

இக்காரணம் பற்றியேதான்

**पुण्यस्य फलं इच्छन्ति पुण्यं नेच्छन्ति मानवाः ।**
**न पापफलमिच्छन्ति पापं कुर्वन्ति यत्नतः ॥**

**புண்யஸ்ய ப²லம் இச்ச²ந்தி புண்யம் நேச்ச²ந்தி மானவா: ।**
**ந பாபப²லமிச்ச²ந்தி பாபம் குர்வந்தி யத்னத: ॥**

என்று கூறப்பட்டுள்ளது. மனிதர்கள் உண்மையான ஸுகத்தை விரும்புகிறுர்களேயன்றி அதற்கான உபாயங்களை நாடுவதில்லை. அவ்வாறே துன்பங்களை வெறுக்கிறுர்களேயன்றி அவைகளைக் கொடுக்கும் காரியங்களையே செய்கிறுர்கள் என்பது பொருள்.

இனி அவர் பதினுறும் அத்யாயத்தில் கூறியுள்ள சில விஷயங்களைக் கவனிப்போம்.

**आशापाशशतैर्बद्धाः कामक्रोधपरायणाः।**
**ईहन्ते कामभोगार्थमन्यायेनार्थसञ्चयान् ॥ १६.१२ ॥**

**ஆஶாபாஶஶதைர்ப³த்³தா⁴: காமக்ரோத⁴பராயணா:।**
**ஈஹந்தே காமபோ⁴கா³ர்த²மந்யாயேனார்த²ஸஞ்சயான் ॥ 16.12 ॥**

**अनेकचित्तविभ्रान्ता मोहजालसमावृताः।**
**प्रसक्ताः कामभोगेषु पतन्ति नरकेऽशुचौ ॥ १६.१६ ॥**

**அனேகசித்தவிப்⁴ராந்தா மோஹஜாலஸமாவ்ருதா:।**
**ப்ரஸக்தா: காமபோ⁴கே³ஷு பதந்தி நரகே(அ)ஶுசௌ ॥ 16.16 ॥**

என்று ஓரிடத்தில் கூறுகின்றுர்.

சிற்றின்ப ஆசைகளாகின்ற பாசங்களால் கட்டுண்டு மாறி மாறி ஏற்படும் கோபதாபங்களுக்கும் வசப்பட்டு அவ்வின்பங்களைப் பெறுவதற்காகத் தீயவழிகள் பலவற்றிலும் ஈடுபட்டு அதன் மூலம் ஏற்படும் பலவிதமான குழப்பங்களுக்காளாகி அறியாமையெனும் வலையினுளகப்பட்டு அதனின்றும் வெளியேற வழியறியாமல் பற்பல துன்பங்களுக்குப் பெரும்பாலானேர் ஆளாகின்றுர்கள் என்பதே இவ்விரு ச்லோகங்களின் கருத்தாகும்.

## ஸ்வர்கம் ஸுகமா?

அப்படியாயின் மானுஷபோகங்களெனப்படும் இப்பிறவியிலேயே நாம் அனுபவிக்கத்தக்க இவ்வுலகத்தில் அடையக்கூடிய விஷயங்களில் அறவே ஆசை கொள்ளாமல் திவ்ய போகங்களெனப்படும் மறுபிறவியில் நாம் அனுபவிக்கத் தக்க ஸ்வர்க்கம் போன்ற வேறு உலகங்களில் அடையக்கூடிய பொருள்களில் ஆசை வைத்து அவற்றை அடைவதற்கான முயற்சிகளில் நாம் ஈடுபடலாமோவெனில் அவ்விஷயத்திலும் பகவான் பகவத் கீதையில் என்ன கூறியிருக்கின்றுர் என்பதையும் சிறிது கவனிப்போம்.

**यामिमां पुष्पितां वाचं प्रवदन्त्यविपश्चितः।**
**वेदवादरताः पार्थ नान्यदस्तीति वादिनः ॥ २.४२ ॥**

**யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவத³ந்த்யவிபஶ்சித꞉।**
**வேத³வாத³ரதா꞉ பார்த² நான்யத³ஸ்தீதி வாதி³ன꞉ ॥ 2.42 ॥**

**कामात्मानः स्वर्गपरा जन्मकर्मफलप्रदाम्।**
**क्रियाविशेषबहुलां भोगैश्वर्यगतिं प्रति ॥ २.४३ ॥**

**காமாத்மான꞉ ஸ்வர்க³பரா ஜன்மகர்மப²லப்ரதா³ம்।**
**க்ரியாவிஶேஷப³ஹுலாம் போ⁴கை³ஶ்வர்யக³திம் ப்ரதி ॥ 2.43 ॥**

**भोगैश्वर्यप्रसक्तानां तयापहृतचेतसाम्।**
**व्यवसायात्मिका बुद्धिः समाधौ न विधीयते ॥ २.४४ ॥**

**போ⁴கை³ஶ்வர்யப்ரஸக்தானாம் தயாபஹ்ருதசேதஸாம்।**
**வ்யவஸாயாத்மிகா பு³த்³தி⁴꞉ ஸமாதௌ⁴ ந விதீ⁴யதே ॥ 2.44 ॥**

என்று இரண்டாம் அத்யாயத்தில் அவர் கூறியிருக்கின்றுர்.

ஸ்வர்கம் போன்ற வேறு உலகங்களில் நாம் அனுபவிக்க வேண்டிய போகங்களே உண்மையான போகங்களாகும். அவற்றைத் தவிர வேறு ஒன்றுமே கிடையாது. ஆகவே அவற்றைப் பெறுவதற்கு ஸாதனங்களென வேதங்களில் கூறப்பட்டுள்ள பல வகையான கார்யங்களேயும் இப்பிறவியிலேயே நாம் செய்து மறுபிறவிகளில் அவற்றை அனுபவிப்பதே சிறந்த வழியாகும் எனக் கூறுபவர்களும் ஆசை வசப்பட்டு அறியாமையினுலேயே அவ்வாறு கூறுகின்றுர்களேயன்றி வேறல்ல. வேதங்களின் உட்கருத்து அவர் போன்றவர்களுக்கு விளங்காது என்பதே இம்மூன்று கருத்தாகும். மற்றும் சலோகங்களின் ஒன்பதாம் அத்யாயத்திலும்

**ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं**
**क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।**
**एव त्रयीधर्ममनुप्रपन्ना**
**गतागतं कामकामा लभन्ते ॥ ९.२१ ॥**

**தே தம் பு⁴க்த்வா ஸ்வர்க³லோகம் விஶாலம்**
**க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி।**
**ஏவ த்ரயீத⁴ர்மமனுப்ரபன்னா**
**க³தாக³தம் காமகாமா லப⁴ந்தே ॥ 9.21 ॥**

என்றும் பகவான் கூறியிருக்கின்றுர். வேதங்களில் கர்மகாண்ட பாகங்களில் கூறப்பட்டுள்ள பலவகையான கர்மாக்களேச் செய்வதன் பயனுகப் பலர் அவர்கள் விரும்பியவாறே விசாலமான ஸ்வர்க லோகத்தை அடைந்து அங்கு அனுபவிக்க வெண்ணிய போகங்களே யெல்லாம் அனுபவித்துவிட்டு அதற்கான புண்யம் கரைந்து போனவுடன் அங்கேயே தங்கி நிற்க வழி இல்லாததால் திரும்பவும் மனுஷ்ய

லோகமெனப்படும் இவ்வுலகிற்கே வந்து சேருகிறுர்கள். காமவசப்பட்டு பயன்களைக் கருதியே காரியங்களைச் செய்துகொண்டிருப்பவர்கள் கதாகதம் எனப்படும் பிறப்பு இறப்பு என்ற இந்தச் சுழலில் சிக்கியே ஆகவேண்டுமென்பதே இந்த ச்லோகத்தின் கருத்தாகும்.

**कुर्वते कर्म भोगाय कर्म कर्तुं च भुञ्जते ।**
**नद्यां कीटा इवावर्तादावर्तान्तरमाशुते ॥**
**व्रजन्तो जन्मनो जन्म लभन्ते नैव निर्वृतिम् ॥**

**குர்வதே கர்ம போ⁴கா³ய கர்ம கர்தும் ச பு⁴ஞ்ஜதே ।**
**நத்³யாம் கீடா இவாவர்தாதா³வர்தாந்தரமாஶுதே ॥**
**வ்ரஜந்தோ ஜன்மனோ ஜன்ம லப⁴ந்தே நைவ நிர்வ்ருதிம் ॥**

என்ற வித்யாரண்ய வாக்யமும் இங்கு கவனத்திற்குரியது. சாப்பிடுவதற்காக வேலை செய்துகொண்டும் வேலை செய்வதற்காகச் சாப்பிட்டுக் கொண்டும் காலத்தைக் கடத்திக் கொண்டிருப்பவர்கள் ஒரு மஹாநதியில் விழுந்த புழுக்கள் ஒரு சுழலிலிரு ந்து மற்றெரு சுழலிலும் அதிலிருந்து மற்றென்றிலும் மாறிமாறி விழுந்து தவிப்ப தைப்போல் ஒரு பிறவியிலிருந்து மற்ருேர் பிறவியிலும். அதிலிருந்து மற்றென் றிலும் மாறிமாறி விழுந்து தவிக்கின்றுர்களேயன்றி ஸுகத்தை அடைவதில்லை என்பதே இதன் பொருளாகும். ஸ்வர்கலோகமென்ன ப்ரம்மலோகத்தை அடைந்தவ னது கதியும் இதுவேதான் என்பதையும் எட்டாம் அத்யாயம் பதினுறும் ச்லோகத்தி லேயே

**भाब्रह्मभुवना लोकाः पुनरावर्तिनोऽर्जुन**

**பா⁴ப்³ரஹ்மபு⁴வனு லோகாः புனராவர்தினோ(அ)ர்ஜுன**

என்று பகவான் கூறிவிட்டார்.

**प्लवा होते अदृढा यज्ञरूपा अष्टादशोक्तमवरं येषु कर्म ।**
**एतच्छ्रेयो येऽभिनन्दन्ति मूढा जरामृत्युं ते पुनरेवापियन्ति ॥**

**ப்லவா ஹோதே அத்³ருடா⁴ யஜ்ஞரூபா அஷ்டாத³ஶோக்தமவரம் யேஷு கர்ம ।**
**ஏதச்ச்²ரேயோ யே(அ)பி⁴னந்த³ந்தி மூடா⁴ ஜராம்ருத்யும் தே புனரேவாபியந்தி ॥**

**अविद्यायां बहुधा वर्तमाना वयं कृतार्था इत्यभिमन्यन्ति बालाः ।**
**यत्कर्मिणो न प्रवेदयन्ति रागात् तेनातुराः क्षीणलोकाश्च्यववन्ते ॥**

**அவித்³யாயாம் ப³ஹுதா⁴ வர்தமானு வயம் க்ருதார்தா²**
**இத்யபி⁴மன்யந்தி பா³லாः ।**
**யத்கர்மிணோ ந ப்ரவேத³யந்தி ராகா³த் தேனுதுராः**
**க்ஷீணலோகாஶ்ச்யவவந்தே ॥**

**इष्टापूर्तं मन्यमाना वरिष्ठं नान्यच्छ्रेयो वेदयन्ते प्रमूढाः ।**
**नाकस्य पृष्ठे ते सुकृतेऽनुभूत्वा इमं लोकं हीनतरं वा विशन्ति ॥**

**இஷ்டாபூர்தம் மன்யமானா வரிஷ்ட²ம் நான்யச்சே²யோ வேத³யந்தே ப்ரமூடா⁴: ।**
**நாகஸ்ய ப்ருஷ்டே² தே ஸுக்ருதே(அ)னுபூ⁴த்வா இமம் லோகம்**
**ஹீனதரம் வா விஶந்தி ॥**

**परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणो निर्वेदमायान्नास्त्यकृतः कृतेन ।**
**तद्यथेह कर्म जतो लोकः क्षीयते एवमेवामुत्र पुण्यजितो लोकः क्षीयते ॥**

**பரீக்ஷ்ய லோகான் கர்மசிதான் ப்³ராஹ்மணோ**
**நிர்வேத³மாயான்னாஸ்த்யக்ருத: க்ருதேன ।**
**தத்³யதே²ஹ கர்ம ஜதோ லோக: க்ஷீயதே ஏவமேவாமுத்ர**
**புண்யஜிதோ லோக: க்ஷீயதே ॥**

**जानाम्यहं शेवधिरित्यनित्यं न ह्यध्रुवैः प्राप्यते हि ध्रुवं तत् ।**
**ततो मया नाचिकेतश्चितोऽग्निः अनित्यैः द्रव्यैः प्राप्तवानस्मि नित्यम् ॥**

**ஜானாம்யஹம் ஶேவதி⁴ரித்யநித்யம் ந ஹ்யத்⁴ருவை:**
**ப்ராப்யதே ஹி த்⁴ருவம் தத் ।**
**ததோ மயா நாசிகேதஶ்ரிதோ(அ)க்³னி: அநித்யை: த்³ரவ்யை:**
**ப்ராப்தவானஸ்மி நித்யம் ॥**

**यो वै भूमा तत्सुखं तदमृतम् ।**
**नाल्पे सुखमास्ति यदल्पं तन्मत्यम् ॥**

**யோ வை பூ⁴மா தத்ஸுக²ம் தத³ம்ருதம் ।**
**நால்பே ஸுக²மாஸ்தி யத³ல்பம் தன்மத்யம் ॥**

என்பன போன்ற உபநிஷத் வாக்யங்களின் கருத்துக்களையேதான் பகவான் நமக்குத் தெளிவாக முன்கூறியபடி உபதேசித்திருக்கின்றார்.

## வினைகளும் அவற்றின் பயன்களும்

நாம் செய்யும் பலவகையான கார்யங்களையும் பயன்களையும் பகவான் மூன்றாகப் பிரித்துக் கூறியிருக்கின்றார்.

**अनिष्टमिष्टं मित्रं च त्रिविधं कर्मणः फलम् ।**
**भवत्यत्यागिनां प्रेत्य न तु संन्यासिनां क्वचित् ॥**

**அநிஷ்டமிஷ்டம் மித்ரம் ச த்ரிவித⁴ம் கர்மண: ப²லம் ।**
**ப⁴வத்யத்யாகி³னாம் ப்ரேத்ய ந து ஸம்ந்யாஸினாம் க்வசித் ॥**

மனிதப் பிறவியினும் கீழான பிறவிகளுக்குக் காரணமாய் நின்று துக்கத்தையே பயக்கும் பாபமே அதாவது கொடிய செயல்களே அநிஷ்டமெனப்படும். மனிதப் பிறவியினும் மேலான பிறவிகளுக்குக் காரணமாய் நின்று ஸுகத்தையே பயக்கும் புண்ணியமே அதாவது நற்செயல்களே இஷ்டமெனப்படும். மனிதப் பிறவிக்கே காரணமாய் நின்று ஸுக துக்கங்களைக் கலந்தே பயக்கும் பாபபுண்ணியங்களின் முன் கூறிய இருவகைச் செயல்களின் கலப்பே மிச்ரமெனப்படும். முக்குணங்களுள் கட்டுண்டு ஆன்ம அறிவைப் பெறுமல் அறிவிலிகளாகவே இருக்கும் யாவரும் இவைகளிலிருந்து தப்பவே முடியாது. ஆன்ம அறிவைப் பெற்றவரையே இவை அணுகாது என்பதே இந்த ச்லோகத்தின் கருத்தாகும்.

**पुण्येन पुण्यं पापेन पापमुभाभ्यामेव मनुष्यलोकम्**
**एवं हवाव न तपति ।**
**किमहं साधु नाकरवं किमहं पापमकरवम् इति ॥**

**புண்யேன புண்யம் பாபேன பாபமுபா4ப்4யாமேவ மனுஷ்யலோகம்**
**ஏவம் ஹவாவ ந தபதி ।**
**கிமஹம் ஸாது4 நாகரவம் கிமஹம் பாபமகரவம் இதி ॥**

என்பன போன்ற பல உபநிஷத் வாக்யங்களின் கருத்தையேதான் பகவான் இங்கு நமக்கு உபதேசிக்கின்றுர்.

## பிறவிச் சுழல்கள்

**धर्माद्देवत्वमेति व्रजति पुनरधः पातकै स्थावरादीन**
**देहान्प्राप्य प्रणश्यन्क्वचिदपि लभने मानुषत्वं च ताभ्याम् ।**
**कर्मज्ञानोभवेन व्रजति विधिपदं मुच्यते के ऽपि तस्मिन्**
**रागी प्रत्येति भूयो जनिमितिमं भ्रमीतीह लोकः ॥**

**த4ர்மாத்3தே3வத்வமேதி வ்ரஜதி புனரத4: பாதகை ஸ்தா2வராதீ3ன**
**தே3ஹான்ப்ராப்ய ப்ரணஶ்யன்க்வசித3பி லப4னே மானுஷத்வம் ச தாப்4யாம் ।**
**கர்மஜ்ஞானோப4வேன வ்ரஜதி விதி4பத3ம் முச்யதே கே (அ)பி தஸ்மின்**
**ராகீ3 ப்ரத்யேதி பூ4யோ ஜனிமிதிமம் ப்4ரமீதீஹ லோக: ॥**

இந்த ஒரே ச்லோகத்தில் கீழ்க் கூறிய அவ்வளவு விஷயங்களையும், ஏன் என்றபடி வைராக்கியத்தை உண்டுபண்ணுவதற்கென்றே சாந்தோக்ய உபநிஷத் ஐந்தாம் அத்யாயத்தில் கூறப்பட்டுள்ள பஞ்சாக்னி வித்யை என்னும் உபநிஷத் பாகத்தின் ஏனைய விஷயங்களையும் ரத்னச் சுருக்கமாக நமக்கு ஒரு பெரியவர் எழுதி விளக்கியிருக்கின்றுர். அதாவது

**योनिमन्ये प्रपद्यन्ते शरीरत्वाय देहिनः ।**
**स्थाणुमन्येऽनुसंयन्ति यथाकर्म यथाश्रुतम् ॥**

**யோனிமன்யே ப்ரபத்³யந்தே ஶரீரத்வாய தே³ஹினः ।**
**ஸ்தா²ணுமன்யே(அ)னுஸம்யந்தி யதா²கர்ம யதா²ஶ்ருதம் ॥**

என்று கடவல்லியில் கூறியுள்ளபடி ஸ்வர்க ஸாதனமென வேதங்களில் கூறப்பட்ட யக்ஞம், யாகமெனப்படும் கர்மாக்களுள் ஏதாவது ஒன்றைச் செய்வதன் பயனாக அங்கு சென்று போகங்களை அனுபவிப்பதற்காக மனிதன் ஒரு சமயம் தேவயோனியை அடைகின்றான். வேதங்களால் செய்யக்கூடாதவையென தடை செய்யப்பட்டுள்ள கொலை, கொள்ளிவைத்தல் போன்ற கெட்ட காரியங்களை அறிந்தோ அறியாமலோ செய்வதன் பயனாக துக்கங்களையனுபவிப்பதற்காக நரகாதி லோகங்களில் பிறக்கின்றான். மரம் செடி கொடிகளெனப்படும் பிறவிகளையும் சில ஸமயம் அடைகின்றான். இவனது புண்ய பாபங்கள் ஸமநிலையை அடையும் பொழுதுதான் மனிதப் பிறவியை அடைகின்றான். வேதங்களில் கூறப்பட்டுள்ள கர்மாக்களையும் மானஸிக கர்மாக்களெனப்படும் உபாஸனைகளையும் சேர்த்துச் செய்வதன் பயனாக ப்ரம்மலோகத்தில் பிறவியெடுத்து அங்குள்ள போகங்களை அனுபவிக்கிறான். அதற்கான வினை தீர்ந்ததும் எஞ்சியுள்ள கர்மங்களின் பயனாக மறுபடியும் வேறு இடம் சென்று பிறக்கின்றான். எண்பத்தி நான்கு லக்ஷம் ஜீவராசி வகைகள் என சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளபடி மாறி மாறி அவற்றைப் பெறுவதற்காகப் பிறப்பதும் இறப்பதுமான சுழலில் அகப்பட்டுக்கொண்டு விடுதலையடைய வழியறியாமல் ஒவ்வொருவனும் ஓய்வின்றிச் சுற்றிக்கொண்டேயிருக்கிறான். ஆயிரத்திலொருவன் என்றப்படி யாரோ ஒருவனே அறிவின் பயனாக இதிலிருந்து தப்புகிறான் என்பதே இச்சுலோகத்தின் கருத்தாகும்.

## ஸுகம் எங்கே?

இதன் தொடர்பாகவே அந்தப் பெரியவரே எழுதியுள்ள மற்றோர் ச்லோகத்தையும் கவனிப்போம்.

**दुःखं स्वर्गावपाते बहुविधनरके गर्भवासेऽतिदुःखम्**
**निःस्वातन्त्र्याश नायाग्रहगदरुदिनैः शैशवे दुःखमेव ।**
**तारुण्ये मर्पलोभव्यसनपरिभवोद्वेगदारिद्रयदुःखं**
**वार्धक्ये शोकम हेन्द्रिय विलयगदैर्दुः खमन्तेऽतिदुःखम् ॥**

**து³:க²ம் ஸ்வர்கா³வபாதே ப³ஹுவித⁴நரகே க³ர்ப⁴வாஸே(அ)திது³:க²ம்**
**நிःஸ்வாதந்த்ர்யாஶ நாயாக்³ரஹக³த³ருதி³னை: ஶைஶவே து³:க²மேவ ।**
**தாருண்யே மர்பலோப⁴வ்யஸனபரிப⁴வோத்³வேக³தா³ரித்³ரயது³:க²ம்**
**வார்த⁴க்யே ஶோகம ஹேந்த்³ரிய விலயக³தை³ர்து³: க²மந்தே(அ)திது³:க²ம் ॥**

ஸ்வர்கபோகம் முடிந்து அவ்விடம் விட்டு வெளியேற வேண்டிய நாள் நெருங்க அதை நினைத்து நினைத்து ஏற்படும் துக்கத்தினாலேயே அம்மயமான அவன் சரீரம் உருகிவிடுகிறது. வெளியேறியபின் பாபத்தின் பயனாக ரௌரவாதி பாபலோகங்களை அடைந்து அங்குப் பல விதமான துக்கங்களை அனுபவிக்கிறான். கர்பவாஸத்தின் மூலம் அடையவேண்டிய பிறவியையடைய நேரும்பொழுது, கர்போபநிஷத் ஏனைய புராணங்களில் கூறியுள்ளபடி பலவிதமான துக்கங்களை அனுபவிக்கிறான், பாரதந்த்ரியம், பசி, தாகம் க்ரஹபீடைகள் ஏனைய வியாதிகள் அழுகைகள் போன்றவற்றால் இளமைப்பருவத்தில் பல துக்கங்களை அனுபவிக்கிறான். கோபம், பேராசை, வேண்டாத விஷயங்களில் ஏற்படும் பற்று, பிறர்களால் ஏற்படும் அவமதிப்பு, எதிர் பாராமல் ஏற்படும் பல நிகழ்ச்சிகளால் மனதில் ஏற்படும் குழப்பம், ஏழ்மை போன்றவற்றால் நடுவயதில் பல துக்கங்களை யனுபவிக்கிறான். இஷ்ட வஸ்துக்களின் பிரிவு, மறதி, புலன்களில் ஏற்படும் பல வகையான குறைபாடுகள், எளிதாகவே ஏற்படும் பலவிதமான நோய்கள் போன்றவற்றல் வயதான நிலையில் துக்கங்களை அனுபவிக்கின்றான். மரணாவஸ்தை என்று பிரஸித்தமாகக் கூறப்படும் துன்பங்கள் பலவற்றை மரண காலத்தில் அனுபவிக்கின்றான். ஆகவே ஸுகம் எங்கே? மனிதப்பிறவியிலேயே ஒரு ஜீவனின் நிலை இதுவானால், இதிலும் தாழ்ந்த பிறவிகளில் அவன் அனுபவிக்க வேண்டிய துக்கங்களைப்பற்றி என்னவென்று கூறுவது என்பதே இந்த ச்லோகத்தின் கருத்தாகும்.'ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறே பதம் என்ற முறையிலேயே இங்கு சில துக்கங்களே எடுத்துக்காட்டாகக் கூறப்பட்டுள்ளன. தாரித்திரிய மெனப்படும் ஏழ்மை ஒன்றினால் மட்டும் ஏற்படும் துன்பங்களை மட்டும் விவரித்துக் கூறும் ஒரு ச்லோக்மும் இவ்விடத்தில் ஞாபகத்திற்கு வருகிறது.

**दारिद्र्याश्रियमेति ह्रीपरिगतः प्रभ्रश्यते तेजसो**
**निस्तेजाः परिभूयते परिभव निर्वेदमापद्यते ।**
**निर्विण्णः शुचमेति शोकपिहितो बुध्या परित्यज्यते**
**निर्बुद्धिः क्षयमेत्यहो निधनता सर्वापदामास्पदम् ॥**

**தா³ரித்³ரயாஶ்ரியமேதி த்³வீபரிக³த: ப்ரப்⁴ரஶ்யதே தேஜஸோ**
**நிஸ்தேஜா: பரிப்⁴ரூயதே பரிப⁴வ நிர்வேத³மாபத்³யதே ।**
**நிர்விஷ்ண: ஶுசமேதி ஶோகபிஹிதோ பு³த்⁴யா பரித்யஜ்யதே**
**நிர்பு³த்³தி⁴: க்ஷயமேத்யஹோ நித⁴னதா ஸர்வாபதா³மாஸ்பத³ம் ॥**

இது போன்று நாம் படும் துன்பங்களை நமக்கே எடுத்துக் கூறும் பெரியோர்களின் வாக்குகளும் எவ்வளவோ இருக்கின்றன, அனைத்தையும் கூற ஆதிசேஷனாலும் இயலாது.

## எங்கில்லை துக்கம்?

மானிடப் பிறவியிலும் அதிலும் தாழ்ந்த பிறவிகளிலும் பலவிதமான துக்கங்கள் உள்ளன என்று எடுத்துக்காட்டப்பட்டது. மானிடப் பிறவியினும் மேலான

தெய்வப் பிறவிகளிலும் பலவிதமான துக்கங்கள் உள்ளன, என்று கூறியிருப்பதை யும் சிறிது கவனிப்போம்.

**इन्द्रलोके महदुःखं प्राजपत्ये तथैव च**
**विष्णुलोके च रौद्रे च दुःखमेव विचारतः**

**இந்த்³ரலோகே மஹது³:க²ம் ப்ராஜபத்யே ததை²வ ச**
**விஷ்ணுலோகே ச ரௌத்³ரே ச து³:க²மேவ விசாரத:**

அறிவாளிகள் ஆய்ந்து பார்க்குமிடத்து இந்த்ர லோகமெனப்படும் ஸ்வர்க லோகத்திலும் பல வகையான துக்கங்கள் உள்ளன. அவ்வாறே ப்ராஜாபத்ய மெனப் படும் ப்ரம்ம லோகத்திலும், விஷ்ணுலோக மெனப்படும் வைக்குண்டத்திலும் ருத்ர லோகமெனப்படும் கைலாஸத்திலும் பலவிதமான துக்கங்கள் உள்ளன என்பதே இந்த ச்லோகத்தின் கருத்தாகும்.

இது வியாஸவசனம் என உரையில் கூறப்பட்டுள்ளது. ஆயினும் இது வியா ஸரால் எங்கு கூறப்பட்டுள்ளது என்பது ஆய்ந்து பார்த்தும் அறிய முடியாததாயிருக் கிறது என்ற ஓர் குறிப்பும் காண்கிறது. இந்தச்லோகம் அவரால் எழுதப்பட்டதா இல்லையா என்பது நமது முக்யமான ப்ரச்னையல்ல, இந்தச்லோகத்தில் சொல்லப் பட்டுள்ள விஷயம் பொருத்தமானதா இல்லையா என்பதே ப்ரச்னை. வேதாந்தங்கள், இதிஹாஸ புராணங்களைக் கொண்டு ஆராயுமிடத்து மிகமிகப் பொருத்தமென்பதே நமது அபிப்ராயம், ஏனெனில்

**यथोदकं दुर्गेश्वृष्टं पर्वतेषु विधावति ।**
**एवं धर्मान्पृथक् पश्यंस्तानेवानुविनश्यति ॥**

**யதோ²த³கம் து³ர்கே³ஶ்வ்ருஷ்டம் பர்வதேஷு விதா⁴வதி ।**
**ஏவம் த⁴ர்மான்ப்ருத²க் பஶ்யம்ஸ்தானேவானுவினஶ்யதி ॥**

என்று கடவல்லியில் கூறியுள்ளபடி தேவர்களுள் தேவர்கள். ஆஜான தேவர்கள், கர்ம தேவர்கள் என்றும் அவர்களுக்கெல்லாம் அரசனாக தேவராஜன் என்றும் அவனு க்கு ஆசிரியராக ப்ரஹஸ்பதி என்றும் தேவலோகத்திலும் பல பாகுபாடுகள் உள்ளன. ப்ரம்மாதி லோகங்களிலும் ஸாலோக்யமுக்தி பெற்றவர்கள். ஸாரூப்ய முக்தி பெற் றவர்கள், ஸாமீப்ய முக்தி பெற்றவர்கள் நித்ய ஸூரிகள் என்றும், அநித்யஸூரிகள் என்றும் அவ்வங்கே அவர்களுக்கெல்லாம் அரசனாக ப்ரம்மா, விஷ்ணு, சிவன் என்றும் பல பாகுபாடுகள் உள்ளன. எங்கெங்கு இத்தகைய பாகுபாடுகள் உள்ளன வோ அங்கெல்லாம் காமம், க்ரோதம், லோபம், மோஹம் மதம், மாத்ஸர்யம் என்னும் இவைகளும் கண்டிப்பாக இருந்தேயாக வேண்டும். ஆகவே அவற்றின் அடிப்படையில் தோன்றும் அவ்வளவு துன்பங்களும் அவர்களுக்கும் இருந்தேயாக வேண்டும்.

மற்றும் அசுரர்களாலும் மகர்ஷிகளின் சாபங்களாலும், மகர்ஷிகளின் கொடிய தவங்களாலும் பந்துமித்ர புத்ர களத்ரங்களின் பிரிவாற்றுமைகளாலும், கொடிய அரக்கர்களாலும் அவர்கள் அனுபவிக்க வேண்டிய துன்பங்களும் கணக்கிலடங்கா

**भीषास्मानः पवते भयादस्या ग्नि स्तपति**

**பீ⁴ஷாஸ்மானஃ பவதே ப⁴யாத³ஸ்யா க்³னி ஸ்தபதி**

போன்ற மந்திரங்களும் இவர்களுக்குள்ள பயங்களை எடுத்துக் கூறுகின்றன.

**द्वितीयाद्व भयं भवति । उदरमन्तरं कुरुते अथ तस्य भयं भवति' ।**

**த்³விதீயாத்³வ ப⁴யம் ப⁴வதி । உத³ரமந்தரம் குருதே அத² தஸ்ய ப⁴யம் ப⁴வதி' ।**

என்றெல்லாம் அல்லவா உபநிஷத்துக்கள் கூறுகின்றன? ஆகவே ஈரேழு பதினுன்கு எனப்படும் இவ்வுலகங்களுள் எங்குச் சென்றுலும் துன்பத்தைத் தவிர வேறில்லை. இக்காரணம் பற்றியே தான் பகவானும் பகவத் கீதையில் பிறவியையேதுக்காலயம்

**(जन्म दुःखालयमशाश्वतम्)**

**(ஜன்ம து³ஃகா²லயமஶாஶ்வதம்)**

என்று கூறிவிட்டார். பிறவாமையின்றி துக்கங்களை விலக்கவே முடியாது.

**न ह वै सशरीरस्यसतः प्रियाप्रिययोरपहतिरस्ति ।**
**अशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशनः ॥**

**ந ஹ வை ஸஶரீரஸ்யஸதஃ ப்ரியாப்ரியயோரபஹதிரஸ்தி ।**
**அஶரீரம் வாவ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶனஃ ॥**

என்னும் உபநிஷத் வாக்யங்களும் இக்கருத்தையே தான் வலியுறுத்தியுள்ளன.

## அறிவைத் தேடு

ஆகவே அறவே துக்கங்கள் போகவேண்டுமாஞல் பிறவி போகவேண்டும். பிறவி போகவேண்டுமாஞல் அதற்குக் காரணமான ப்ரவிருத்தி எனப்படும் கருமங் கள் போக வேண்டும். அது போக வேண்டுமாஞல் அதற்குக் காரணமான தோஷ ங்களெனப்படும் ராகத் வேஷங்கள் போக வேண்டும். அவை போக வேண்டுமாஞல் மித்யாக்ஞானம் எனப்படும் அறியாமை போக வேண்டும் அது போக வேண்டு மாஞல் தத்வக் ஞானத்தை அவசியம் ஒவ்வொருவனும் பெற்றாக வேண்டும்.

**तद्यथेषिका तूलमग्नौ प्रोतं प्रदूयेत एवं ह एवंविदः सर्वे पाप्मानः प्रद्युन्ते' छा ।**
**यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात् कुरुतेऽर्जुन ।**
**ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥**

**भिद्यते हृदयगन्थिः छिद्यन्ते सर्वसंशयाः ।**
**क्षीयन्ते चास्य सर्वकर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥**

**न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।**

**தத்3யதே2ஷிகா தூலமக்3னௌ ப்ரோதம் ப்ரதூ3யேத ஏவம் ஹ ஏவம்வித3: ஸர்வே பாப்மானः ப்ரத்3யுந்தே' சா2 ।**
**யதை2தா4ம்ஸி ஸமித்3தோ4(அ)க்3நிர்ப4ஸ்மஸாத் குருதே(அ)ர்ஜுன ।**
**ஜ்ஞாநாக்3னிः ஸர்வகர்மாணி ப4ஸ்மஸாத்குருதே ததா2 ॥**

**பி4த்3யதே ஹ்ருத3யக3ந்தி2: சி2த்3யந்தே ஸர்வஸம்ஶயாः ।**
**க்ஷீயந்தே சாஸ்ய ஸர்வகர்மாணி தஸ்மின் த்3ருஷ்டே பராவரே ॥**

**ந ஹி ஜ்ஞானேன ஸத்3ருஶம் பவித்ரமிஹ வித்3யதே ।**

என்பன போன்ற வாக்கியங்களின் கருத்தே இவ்வாறு விளக்கமாக எடுத்துக் கூறப் பட்டுள்ளது. ஆகவே, பிறவிதுக்கம் போக ஞானம் ஒன்றே வழியாகும். வேறு வழியே கிடையாதென்பதே சாஸ்திரங்களின் முடிவாகும். இக்காரணம் பற்றியே தான்

**नान्यः पन्थाविद्यते**

**நான்யः பந்தா2வித்3யதே**

என்றும் கூறப்பட்டுள்ளது.

இக்காரணம் பற்றியே தான்

**अज्ञानसर्पदष्टस्य ब्रह्मज्ञानपिधं विना**
**किं वेदैः किमु शास्त्रैश्य किं मन्त्रैः किमु वोषधैः ।**

**அஜ்ஞானஸர்பத3ஷ்டஸ்ய ப்3ரஹ்மஜ்ஞானபித4ம் விநா**
**கிம் வேதை3: கிமு ஶாஸ்த்ரைஶ்ய கிம் மந்த்ரைः கிமு வோஷதை4: ।**

என்றும் கூறப்பட்டுள்ளது.

